அமரர் ரோஜா முத்தையா
முதலாண்டு நினைவு வெளியீடு-1
4—6—1993

புலவர் ஜி.யு. போப்பையர்
இயற்றிய

# இலக்கண நூற்சுருக்கம்

T.R.N.M.L. AND PUBLICATIONS
and
BHARATI SANKAM
5-D, Selvam Nagar, Thanjavur-7

361

புலவர் ஜி.யு. போப்பையர்
இயற்றிய

# இலக்கண நூற்சுருக்கம்

முதற்புத்தகம்



பதிப்பாசிரியர் :
ய. மணிகண்டன்






T.R.N.M.L. AND PUBLICATIONS
and
BHARATI SANKAM
Selvam Nagar, Thanjavur -7

1884 இல் பதினான்காம் பதிப்பாக வெளிவந்த
"இலக்கண நூற்சுருக்கம்" நூலின் தலைப்புப் பக்கத் தோற்றம்.

# TAMIL GRAMMAR. 273

## No. I.

BY THE REV. G. U. POPE.

# இலக்கண நூற்சுருக்கம்.



முதற்புத்தகம்.

இஃது

ஜி. யு. போப்பையரால்

செய்யப்பட்டது.

FOURTEENTH EDITION.

Revised and Printed by order of
The Director of Public Instruction.

MADRAS:
PRINTED AT THE KALARATNAKARAM PRESS.
1884.



செப்பம் செய்யப்பெற்ற பதிப்பு : ஜூன், 1993
விலை : ரூ. ஐந்து (5/-)

அச்சுப்பதிவு : சர்மா'ஸ் ஸானடோரியம் ப்ரஸ், புதுக்கோட்டை.

## ஒரு சொல் கேளீர்

யாமறிந்த வகையில் உண்மைத் தமிழ்த் தொண்டர்கள் ஒரு சிலரே ஆவர். அவர்களுள் மிக முக்கியமானவர், 4.6.1992 இல் அமரர் ஆகிவிட்ட பெரியவர் கோட்டையூர் ரோஜா முத்தையா. ஒரு நூறு பண்டிதர்களின் அறிவாற்றலுக்கு நிகரான அற்புத அறிவோடு அவர் விளங்கி வந்தார். இது உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை. இவர் பெருமையை, நம்மைக் காட்டிலும் அதிகமாக அறிந்தவர்கள் மேனாட்டு ஆய்வாளர்களே. எங்களின் கண்களைத் திறந்து விட்ட இந்நூலகப் பெருஞ்செல்வர்க்கு, யாம் செய் அஞ்சலி இச்சிறு நூலாகும்.

கனடாவில் பிறந்து, இங்கிலாந்தில் வளர்ந்து, தமிழகத்தில் வாழ்ந்த பன்மொழிப் புலவர் ஜி.யு. போப்பையர் மீது அமரர் ரோஜா முத்தையா மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். போப்பையரின் இலக்கண நூல்கள் செப்பம் செய்யப்பட்டு மீண்டும் பதிப்பிக்கப் படல் வேண்டும் என்று அவர் மிகவும் விரும்பினார். அவரது விருப்பம் நிறைவேறத் தொடங்கி இருக்கிறது.

'நாங்கள் மாணவர்களாக இருந்த காலத்தில் எங்கள் கரங்களில் திகழ்ந்த இலக்கண நூல்கள் போப்பையரின் இலக்கண நூல்களே' என்று திரு.வி.க. அவர்கள் கூறியதை நினைவிற் கொள்வோம். போப்பையரின் இலக்கண நூல்கள் இலட்சக் கணக்கில் வெளிவந்து ஐந்து கண்டங்களையும் வளைய வந்தன. இதற்கான ஆதாரம் எம்மிடம் இருக்கிறது. மஹாத்மா காந்தியும், தென்னாப்பிரிக்காவில் வாழ்ந்த காலத்தில், தமிழைப் பயின்று, பின்னர் அதைப் பயிற்றுவிக்கவும் விரும்பினார். ஆனால் அவர் எண்ணம் நிறைவேறவில்லை. இதுபற்றி அவர் கூறுவதாவது: "I had undertaken to teach Tamil and Urdu. The little Tamil I knew was acquired during voyages and in jail. I had not got beyond Pope's excellent Tamil handbook"

## 5. Demonstrative letters

5. அ, இ, உ இம்மூன்றும் சுட்டுப்பொருளை உணர்த்திவரின், சுட்டெழுத்தாம்.[1]

(உதாரணம்) அவன், இவன், உவன்; அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன்.[2]

## 6. Interrogative letters

6. ஆ, எ, ஏ, ஓ என்னும் உயிரெழுத்துகளும், யா என்னும் உயிர்மெய்யெழுத்தும் வினாப்பொருளை உணர்த்திவரின், வினாவெழுத்தாம்.[3]

(உ-ம்.) அவனா, எவன், ஏது; அவனே, அதுவோ, யாவை.

## 7. Consonants

7. க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் இப்பதினெட்டும் மெய்யெழுத்தாம்.

## 8. Hard letters

8. இவற்றுள், க், ச், ட், த், ப், ற் என வல்லெழுத்து ஆறாம்.

---

1. இவற்றில் 'அ' எனும் எழுத்து சேய்மைப் பொருளைச் சுட்டும்; 'இ' எனும் எழுத்து அண்மைப்பொருளைச் சுட்டும்; 'உ' எனும் எழுத்து இடைமைப்பொருளைச் சுட்டும்.

2. சுட்டு, அகச்சுட்டு, புறச்சுட்டு என இருவகைப்படும். சொல் லின் அகத்தே பிரிக்கமுடியாமல் சுட்டெழுத்து அமைந்திருப்பின் அகச்சுட்டு என்றும், சொல்லின் புறத்தே பிரிக்கத்தக்க வகையில் சுட்டெழுத்து அமைந்திருப்பின் புறச்சுட்டு என்றும் சுட்டு இரண்டாக வகைப்படுத்தப்பெறும்.

இங்குக் காட்டப்பெற்றுள்ள உதாரண வரிசையில் 'அவன், இவன், உவன்' ஆகிய மூன்றும் அகச்சுட்டுகள். 'அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன்' ஆகிய மூன்றும் புறச்சுட்டுகள்.

3. இவ்வினாவெழுத்துகளில் எ, யா ஆகிய இரண்டும் சொல்லின் முதலிலும் , ஆ, ஓ ஆகிய இரண்டும் சொல்லின் இறுதியிலும், ஏ சொல்லின் முதல், சொல்லின் இறுதி ஆகிய இரண்டிடங்களிலும் வரும்.

## 9. Soft letters. Nasals.

*9.* ங், ஞ், ண், ந், ம், ன் என மெல்லெழுத்து ஆறாம்.

## 10. Medial letters

*10.* ய், ர், ல், வ், ழ், ள் என இடையெழுத்து ஆறாம்.

நெட்டெழுத்துக்குக், குற்றெழுத்தும், வல்லெழுத்துக்கு மெல்லெழுத்தும் இனவெழுத்தாகும்.[1]

## 11. The guttural.

*11.* ஆய்தம் சில இடத்தில் உயிர்போலவும், சில இடத்தில் மெய்போலவும் ஒலித்து, உயிரும் ஆகாமல், மெய்யும் ஆகாமல், தனி நிலையாய் வருகிற ஒரெழுத்தாம்.

அதன் வடிவு ஃ.

## 12. Vowel Consonants.

*12.* உயிரும் மெய்யும் கூடி வழங்குகிற கம்முதல், னௌ ஈறாக உள்ள உளகசு [216] ம் உயிர் மெய்யெழுத்தாம்.

## 13. Abbreviated உ.

*13.* மொழி[2]களின் கடையில் தனிக்குறில் ஒழிந்த மற்றைய எழுத்துகளின் பின் வல்லெழுத்தை ஊர்ந்துவரும் உகரம் குற்றியலுகரம் எனப்படும்.[3]

---

1. எந்த நெட்டெழுத்திற்கு எந்தக் குற்றெழுத்து இனம், எந்த வல்லெழுத்திற்கு எந்த மெல்லெழுத்து இனம் என்பதைக் காட்டும் பட்டியல்:
   அஆ; இஈ; உஊ; எஏ; ஐஇ; ஒஓ; ஔஉ.
   க்ங்; ச்ஞ்; ட்ண்; த்ந்; ப்ம்; ற்ன்.

2. 'மொழி' என்பது 'சொல்' எனும் பொருளிலேயே இந்நூலில் ஆளப்பெற்றுள்ளது.

3. இக்குற்றியலுகரம், வல்லெழுத்தை ஊர்ந்துவரும் உகர இறுதி எழுத்திற்கு முன்னுள்ள எழுத்தை அடிப்படையாகக்கொண்டு அறுவகைப்படுத்தப்படும். அவை நெடிற்றொடர்க் குற்றியலுகரம், ஆய்தத்தொடர்க் குற்றியலுகரம், உயிர்த் தொடர்க் குற்றியலுகரம், வன்றொடர்க் குற்றியலுகரம், மென் றொடர்க் குற்றியலுகரம், இடைத்தொடர்க் குற்றியலுகரம் என அறுவகையாம்.

(உ-ம்.) நாகு, இஃது, வரகு, எழுத்து, குரங்கு, சால்பு.[1]

### 14. Abbreviated இ.

*14.* வருமொழி முதலில் யகரம் வரின், நிலைமொழியீற்றுச் குற்றியலுகரம் கெட, அவ்விடத்து இகரம் தோன்றும். அந்த இகரம் குற்றியலிகரம் எனப்படும்.

(உ-ம்.) செய்வது + யாது = செய்வதியாது.[2]

[3]

---

## 2. எழுத்துப் புணரியல்

## II. COMBINATION OF LETTERS

### 15. Combination.

*15.* நிலைமொழியீறும், வருமொழி முதலும் ஒன்றுபடப் புணர்வது புணர்ச்சியாம்.

### 16. Kinds of Combination of Words.

*16.* அப்புணர்ச்சி இயல்புப் புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி என இருவகைப்படும்.

---

1. இவ்வுதாரண வரிசைச் சொற்கள், முறையே நெடிற்றொடர், ஆய்தத்தொடர், உயிர்த்தொடர், வன்றொடர், மென்றொடர், இடைத்தொடர்க் குற்றியலுகரங்களுக்கான எடுத்துக் காட்டுகளாம்.
2. 'நாகு + யாது = நாகியாது, எஃகு + யாது = எஃகியாது, வரகு + யாது = வரகியாது, கொக்கு + யாது = கொக்கியாது, குரங்கு + யாது = குரங்கியாது, தெள்கு + யாது = தெள்கியாது' என்பவற்றையும் எடுத்துக்காட்டுகளாக இணைத்துக் கொள்க.
3. மேலும் அசைச்சொல்லாகிய 'மியா' என்பதின் மகரத்தின் மேலிருக்கும் இகரமும், குற்றியலிகரம் எனப்படும். எடுத்துக்காட்டு: கேண்மியா, சென்மியா.

## 17. Combination of words suffering no change.

17. நிலைமொழியும் வருமொழியும் விகாரமின்றிப் புணர்வது இயல்புப் புணர்ச்சியாம்.

(உ-ம்.) பொன் + மணி = பொன்மணி
நிலம் + வலிது = நிலம்வலிது

## 18. Combination suffering change of letters.

18. யாதானும் ஒரெழுத்துத் தோன்றவும், ஒரெழுத்து மற்றொன்றாகத் திரியவும், உள்ள எழுத்துக் கெடவும் மொழிகள் புணர்வது விகாரப்புணர்ச்சியாம்.

## 19. Kinds of changes.

19. அவ்விகாரம் மேற்சொல்லியபடியே தோன்றல், திரிதல், கெடுதல் என மூன்று வகையாம்.*

## 20. Vowel before a vowel.

20. இ, ஈ, ஐ என்னும் எழுத்துகளுக்குப் பின் உயிர் வந்தால், இடையிலே யகர [உடம்படு] மெய் தோன்றும்.

(உ-ம்.) மணி + அழகு = மணியழகு
நீ + அணை = நீயணை
மலை + அருவி = மலையருவி

ஏகாரத்திற்குப்பின் உயிர் வந்தால், சில இடத்தில் வகரமும், சில இடத்தில் யகரமும் [உடம்படுமெய்யாகத் ] தோன்றும்.

(உ-ம்.) சே + ஏறி = சேவேறி
நீயே + அவன் = நீயேயவன்.

மற்ற உயிருக்குப்பின் உயிர்வந்தால், வகர உடம்படுமெய் தோன்றும்.

---

* தோன்றல், திரிதல், கெடுதல் ஆகிய மூவகை விகாரப் புணர்ச்சிக்கும் எடுத்துக்காட்டுகள்:

1. தோன்றல் : பூ + கொடி = பூங்கொடி
2. திரிதல் : அல் + திணை = அஃறிணை
கல் + கோயில் = கற்கோயில்
3. கெடுதல் : நிலம் + வலயம் = நிலவலயம்

(உ-ம்.) மக + அரிது = மகவரிது
ஆ + உரிஞ்சி = ஆவுரிஞ்சி
திரு + உளம் = திருவுளம்
பூ + அழகிது = பூவழகிது
நொ + அழகா = நொவ்வழகா[1]
கோ + இல் = கோவில்
கௌ + அழகிது = கௌவழகிது

**21. க், ச், த், ப் Doubled.**

*21.* உயிரெழுத்துக்குப்[2] பின் வரும் க, ச, த, ப பல இடத்தில் இரட்டிக்கும்.

(உ-ம்.) மற்ற + காரியம் = மற்றக் காரியம்
இந்த + சத்தம் = இந்தச் சத்தம்
இனி + செய்வேன் = இனிச் செய்வேன்
அவனுக்கு + கொடுத்தான் = அவனுக்குக் கொடுத்தான்.

**22. க், ச், த், ப் following ய், ர், ழ் Doubled.**

*22.* ய, ர, ழ என்னும் எழுத்துக்குப்[3] பின் க, ச, த, ப வரின் அவை பெரும்பாலும் இரட்டிக்கும்.

(உ-ம்) போய் + சொன்னான் = போய்ச்சொன்னான்
கார் + பருவம் = கார்ப்பருவம்
வீழ்[4] + தூண் = வீழ்த்தூண்

**23. A final consonant in a short syllable before a vowel is doubled.**

*23.* தனிக்குறிலைச் சார்ந்த மெய்யெழுத்துக்குப்பின் உயிர் வந்தால், அந்த மெய்யெழுத்து இரட்டிக்கும்.

---

1. 'நொவ்வழகா' என்பதில், 'வ' என்பதில் உள்ள 'வ்' உடம்படுமெய். 'வ' விற்கு முன் உள்ள 'வ்' புணர்ச்சியால் தோன்றிய மெய்.

2. 'மற்ற' முதலான சொற்களில் ஈற்று உயிர் மெய்யெழுத்தில் உள்ள (ற் + அ) (க் + உ) உயிரெழுத்தைக் குறிக்கிறது.

3. ய், ர், ழ் என்னும் மெய் எழுத்துக்குப்

4. ஆலம் விழுது

(உ-ம்.) மண் + அழகு = மண்ணழகு

**24. The Nasals when doubled.**

*24. குற்றெழுத்தைச் சார்ந்த யகரத்திற்குப் பின்னும், **தனி** ஐகாரத்திற்குப்*[1] *பின்னும் மெல்லெழுத்து இரட்டிக்கும்.*

(உ-ம்.) செய் + நன்றி = செய்ந்நன்றி

2

கை + மாற்று = கைம்மாற்று

**25. ம் before க், ச், த், ந் changed respectively into ங், ஞ், ந், ந்.**

*25. மொழியீற்று மகரம் ககரம் வரின், ஙகரமாம்.*

(உ-ம்.) மனம் + களித்தது = மனங்களித்தது.

*[மொழியீற்று மகரம்] சகரம் வரின், ஞகரமாம்.*

(உ-ம்.) மரம் + சாய்ந்தது = மரஞ்சாய்ந்தது.

*[மொழியீற்று மகரம்] தகரம் வரின், நகரமாம்.*

(உ-ம்.) மனம் + தளர்ந்தது = மனந்தளர்ந்தது.

*[மொழியீற்று மகரம்] நகரம் வரின், நகரமாம்.*

(உ-ம்.) செம் + நெல் = செந்நெல்[3]

*சில இடத்துக் கெடுவதும் உண்டு.*

(உ-ம்.) மனம் + நலம் = மனநலம்.

---

1. *உயிராயும், உயிர்மெய்யாயும் நிற்கும் ஐகாரத்திற்குப்*
2. *இங்கு 'ஐ + நூறு = ஐந்நூறு' எனும் எடுத்துக்காட்டை இணைத்துக் கொள்க.*
3. *'செந்நெல்' என்பதனைப் பண்புத்தொகையாகக் கொண்டு நிலைமொழியின் 'மை' ஈறுபோதல் விதிப்படி கெட்டதாகக் கொண்டு எஞ்சிய மகர ஒற்று நகர ஒற்றாகத் திரிவதாகக் கூறுதல் மரபு.*

   *இவ்வெடுத்துக் காட்டினும் 'தம் + நலம் = தந்நலம்' என்பதனை எடுத்துக்காட்டாய்க் கொள்ளல் சிறப்பு.*

**26. Final ண் before க், ச், ப் changed into ட்.**

*26. மொழியீற்று ணகரம், ககர, சகர, பகரங்கள் வரின், டகரமாகும்.*

(உ-ம்.) மண் + குடம் = மட்குடம்
மண் + சாடி = மட்சாடி
மண் + பானை = மட்பானை

**27. ன், ல், before க், ச், ப் changed into ற்.**

*27. மொழியீற்று னகரமும், லகரமும் ககர, சகர பகரங்கள் வரின், றகரமாய்த் திரியும்.*

(உ-ம்.) பொன் + குடம் = பொற்குடம்
பொன் + சாடி = பொற்சாடி
பொன் + பானை = பொற்பானை

கல் + கூடம் = கற்கூடம்
விரல் + சிறிது = விரற்சிறிது
விரல் + புறம் = விரற்புறம்

**28. ள் before க், ச், ப் changed into ட்.**

*28. மொழியீற்று ளகரம், ககர, சகர, பகரங்கள் வரின், டகரமாம்.*

(உ-ம்.) முள் + கூர்மை = முட்கூர்மை
கள் + சொரிந்தான் = கட்சொரிந்தான்
முள் + புறம் = முட்புறம்

**29. ல் before ம் changed into ன்.**

*29. மொழியீற்று லகரம் மகரம் வரின், னகரமாம்.*

(உ-ம்.) கல் + மலை = கன்மலை.

**30. ள் before ம் changed into ண்.**

*30. மொழியீற்று ளகரம், மகரம் வரின், ணகரமாம்.*

(உ-ம்.) முள் + முடி = முண்முடி

**31.** த் **following** ண், ன் **changed respectively into** ட், ற்.

*31. ணகரத்திற்கும், னகரத்திற்கும் பின்வரும் தகரம், முறையே டகரமாகவும், றகரமாகவும் திரியும்.*

(உ-ம்.) கண் + திறந்தது = கண்டிறந்தது.
பின் + தொடர்ந்தது = பின்றொடர்ந்தது.

**32.** ந் **preceded by** ண், ன் **changed into** ண், ன்.

*32. ணகரத்திற்கும், னகரத்திற்கும் பின்வரும் நகரம், முறையே ணகரமாகவும், னகரமாகவும் திரியும்.*

(உ-ம்.) கண் + நெடிது = கண்ணெடிது
பின் + நெடிது = பின்னெடிது.

**33.** ல் + த் **changed into** ற் + ற்..

*33. லகரமும் தகரமும் புணரும்பொழுது, இரண்டும் றகரமாம்.*

(உ-ம்.) கடல் + திரை = கடற்றிரை
வில் + தழும்பு = விற்றழும்பு

**Elision of one** ற்.

*ஒரு றகரம் கெடுதலுமுண்டு.*

(உ-ம்.) பால் + தீது = பாறீது.

**34.** ல் + ந் **changed into** ன் + ன்.

*34. லகரமும் நகரமும் புணரும்பொழுது, இரண்டும் னகரமாம்.*

(உ-ம்.) கல் + நன்று = கன்னன்று
நல் + நெறி = நன்னெறி

**Elision of one** ன்.

*ஒரு னகரம் கெடுதலுமுண்டு.*

(உ-ம்.) விரல் + நீண்டது = விரனீண்டது.

**35.** ள் + த் **changed into** ட் + ட்

*35. ளகரத்திற்குப்பின் தகரம் வரின், அவை இரண்டும் டகரமாம்.*

(உ-ம்.) முள் + தீது = முட்டீது.

Elision of one ட்

ஒரு டகரம் கெடுதலுமுண்டு.

(உ-ம்.) நாள் + தோறும் = நாடோறும்.

36. ள் + ந் changed into ண் + ண்.

36. ளகரமும் நகரமும் புணரும்பொழுது இரண்டும் ணகரமாம்.

(உ-ம்.) முள் + நுனி = முண்ணுனி
கள் + நாற்றம் = கண்ணாற்றம்.

Elision of one ண்.

ஒரு ணகரம் கெடுதலுமுண்டு.

(உ-ம்.) அருள் + நலம் = அருணலம்.

37. **Omission of ந் preceded by ண், ன் not Joined with a single short letter.**

37. ணகரத்திற்குப் பின்னும், னகரத்திற்குப் பின்னும் மொழிமுதல் நகரம் கெடும்.

(உ-ம்.) கவண் + நெடிது = கவணெடிது
கலன் + நெடிது = கலனெடிது

38. **Omission of the abbreviated உ before a vowel.**

38. மொழியீற்றுக் குற்றியலுகரம் உயிரெழுத்துக்கு முன் கெடும்.

(உ-ம்.) காடு + அலர்ந்தது = காடலர்ந்தது.

39. **More changes than one in the combination of words.**

39. வேறு பல விகாரங்களும் உண்டு.

(உ-ம்.) பனை + காய் = பனங்காய்
அரசு + கோடு = அரசங்கோடு.

என வருவனவாம்.

இரண்டாவது

# சொல்லதிகாரம்

# 2. ETYMOLOGY

**40. Parts of speech**

*40. தமிழ்ச்சொற்கள் பெயர், வினை, இடை, உரி என்று நான்கு வகையாம்.*

**41. Noun**

*41. பொருளின் பெயரைக் காட்டுவது பெயர்ச்சொல்லாம்.*

(உ-ம்.) தேவன், நகரம், மரம், வீடு, நன்மை.

**42. Verb**

*42. பொருளின் தொழிலைக் காட்டுவது வினைச்சொல்லாம்.*

(உ-ம்.) நட, இரு, வாசிக்கிறேன்.

**43. Particle**

*43. தனித்து வழங்குதலின்றி, பெயர் வினைகளை அடுத்து வருவது இடைச்சொல்லாம்.*

(உ-ம்) அதுவே என்பதில், ஏ என்பதும், அவனுமிவனும் என்பதில் உம் என்பதும் இடைச்சொற்களாம்.

**44. Qualifying word; Adjective or Adverb.**

*44. பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையும் தழுவி, அவைகளுக்குரிய குணத்தைக்காட்டுவது உரிச்சொல்லாம்.*

(உ-ம்.) கடிக்கமலம்.

*இதில், கடி என்பது கமலம் என்னும் பெயரைத் தழுவிய உரிச்சொல்லாம்.*

மிகவும் உழைத்தான்.

*இதில், மிகவும் என்பது உழைத்தான் என்னும் வினையைத் தழுவிய உரிச்சொல்லாம்.*

# 1. பெயரியல்

# I. NOUNS

## 45. Characteristics of a Noun.

45. பெயர்ச்சொல்லில் திணை, பால், இடம், வேற்றுமை என நான்கு பொருளை அறியவேண்டும்.[1]

## 46. Class.

46. திணை என்பதற்குக் குலம் என்று அருத்தமாம்.

அது உயர்திணை என்றும்,அஃறிணை என்றும் இருவகையாம்.

மக்கள், தேவர், நரகர் உயர்திணையாம்.

மற்றப்பொருள்கள் எல்லாம் அஃறிணையாம்.

## 47. Gender and Number.

47. ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் எனப் பால் ஐந்துவகையாம்.

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்.) உயர்திணை. | ஆண் பால் | : | மனிதன் |
| | பெண்பால் | : | மனைவி |
| | பலர்பால் | : | மனிதர்கள் |
| அஃறிணை. | ஒன்றன்பால் | : | மரம் |
| | பல்வின்பால் | : | வீடுகள் |

ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால் ஆகிய இம்மூன்றும், ஒருமை[2] என்னப்படும்.[3]

பலர்பால், பலவின்பால் ஆகிய இவ்விரண்டும் பன்மை[2] என்னப்படும்.

---

1. கால இடைநிலைகளை ஏற்காதனவாய் வேற்றுமை உருபுகளை ஏற்க வல்லனவாய்த் திணை, பால், எண், இடம் ஆகியனவற்றை உணர்த்துவனவாய் அமைவன பெயர்ச்சொற்கள் என்க.
2. ஒருமை, பன்மை, என 'எண்' இருவகைப்படும்.
3. 'என்னப்படும்' எனும் சொல்வழக்கு இன்றைய தமிழில், 'எனப்படும்' என னகர மெய் இடைக்குறைந்து வழங்குகின்றது. 'என்னப்படும், எனப்படும்' எனும் இருவகை ஆட்சியும் இந்நூலில் இடம்பெற்றுள்ளமை நோக்கத்தக்கது. ('எனப்படும்' ஆட்சி: காண்க. வரிசை எண்: 13, 70)

**48. Person.**

48. இடமென்பது தானம், அது தன்மை, முன்னிலை, படர்க்கை என மூவகையாம்.

(உ-ம்.) [1](1) தன்மை : ஒருமை: நான், அடியேன்
பன்மை : நாம், நாங்கள், அடியேம்

(2) முன்னிலை: ஒருமை: நீ
பன்மை: நீங்கள்

(3) படர்க்கை: ஒருமை : அவன், அவள், வீடு
பன்மை : அவர்கள், மரங்கள், நிலங்கள்

**49. Case**

49. பெயரின் பொருளை வேறுபடுத்துவதே வேற்றுமையாம்.[2]

**50. Ist or Nominative Case.**

50. பெயரின் இயல்பே முதல் வேற்றுமையாம். அது எழுவாய் [வேற்றுமை] எனவும்படும்.

[(உ-ம்.) 'கண்ணன் வந்தான்']

**51. Sign of the 2nd or accusative case.**

51. இரண்டாம் வேற்றுமையின் உருபு ஐ யாம்.

(உ-ம்.) மனிதனை, தந்தையை, மரத்தை, வீட்டை.

---

1. உதாரண வரிசையில் (1) தன்மை ஒருமையில் 'யான்', என்பதனையும் தன்மைப் பன்மையில் 'யாம்', 'யாங்கள்' என்பவற்றையும் (2) முன்னிலைப் பன்மையில் 'நீர்' என்பதனையும் (3) படர்க்கை ஒருமையில் 'அது' என்பதனையும் படர்க்கைப் பன்மையில் 'அவை' என்பதனையும் இணைத்துக் கொள்க.

2. . அது எட்டு வகைப்படும்.

## 52. Signs of the 3rd Case or Instrumental Ablative.

*52.* மூன்றாம் வேற்றுமையின் உருபுகள் ஆல், ஆன், ஒடு, ஓடு , உடன் என்பவையாம்.

(உ-ம்.) மரத்தால், மனிதனான், அரசனொடு, தோழரோடு, அவருடன்.

## 53. Sign of the 4th or Dative case.

*53.* நான்காம் வேற்றுமையின் உருபு கு என்பதேயாம்.

(உ-ம்.) தந்தைக்கு, வீட்டுக்கு.

## 54. Signs of the 5th case or Ablative of motion.

*54.* ஐந்தாம் வேற்றுமையின் உருபு இல், இன், நின்று, இருந்து என்பவையாம்.

(உ-ம்.) தந்தையில், வீட்டின், மரத்தினின்று, பட்டணத்திலிருந்து.

## 55. Signs of the 6th or Genitive case.

*55.* ஆறாம் வேற்றுமையின் உருபுகள் அது, ஆது, அ, உடைய என்பவையாம்.

(உ-ம்.) தந்தையது கை, தனாது தலை, தன கைகள், தந்தையுடைய கட்டளை.

## 56. Signs of the 7th case or Local Ablative.

*56.* ஏழாம் வேற்றுமையின் உருபு இல், இடத்தில்* , கண் முதலியவையாம்.

(உ-ம்.) அவனில், தந்தையிடத்தில்*, மரத்தின்கண்.

---

* 'இடத்தில்' என்பதனை 'இடம்' எனக் கொள்ளுதலே நன்று. 'இடத்தில்' என்பதில் (இடம் + அத்து + இல்) இடம், இல் எனும் இரு ஏழாம் வேற்றுமை உருபுகள் அமைதல் காண்க. (அத்து - சாரியை)

## 57. Signs of the 8th or vocative case.

*57.* எட்டாம் வேற்றுமையின் உருபுகள் ஏ, ஆ முதலியவாம்.[1]

அது விளிவேற்றுமை என்றும் சொல்லப்படும்.

(உ-ம்.) மனிதனே, அண்ணா.

## 58. The Particle இன்

*58.* முதல் வேற்றுமையும் எட்டாம் வேற்றுமையும் தவிர, மற்ற வேற்றுமைகள் இன் சாரியை பெறும்.

(உ-ம்.) தந்தையினை, கையினால், சோற்றிற்கு, மரத்தினிலிருந்து, பசுவினது, வீட்டின்கண்.

## 59. Nouns ending in அம்.

*59.* மகரவீற்றுப் பெயர்ச்சொற்கள் வேற்றுமைப்படும்பொழுது, அம் என்பது கெட, அத்துச்சாரியை பெறும்.

(உ-ம்.) மரம், மரத்தை, மரத்தால்.

---

*1.* விளிவேற்றுமைக்குத் தனியாக உருபு சுட்டும் மரபில்லை. ஒரு பெயர் விளி ஏற்கும் பொழுது ஈறு கெடுதல், ஈறு திரிதல், ஈறு மிகுதல், ஈற்றயல் நீளல் என எய்தும் மாற்றங்களை விளியுருபு என்பர்.

விளி அண்மை விளி, சேய்மை விளி என இருவகைப்படும்.

தம்பி, ஐய - அண்மை விளி.

(அண்மை விளியில் இயல்பும், ஈறு கெடலும்)

தம்பீ, அப்பா, ஐயாவே சேய்மை விளி.

(சேய்மை விளியில் ஈறு திரிதலும் ஈறுகெட்டு அயல் நீளலும்)

மேலும் உதாரணம்:

அன்னை - அன்னாய் - ஈறு திரிதல்

மன்னன் - மன்ன - ஈறு கெடுதல்

மகன் - மகனே - ஈற்றில் ஒரெழுத்து மிகுதல்

தம்பி தம்பீ - ஈறு திரிதல்

மக்கள் - மக்காள் - ஈற்றயல் திரிதல்

## 60. The noun எல்லாம்

60. எல்லாம் என்பது [வேற்றுமை உருபு ஏற்கும் பொழுது] அற்றுச்சாரியையும்* உருபின்மேல் உம்மும் பெறும்.

(உ-ம்.) எல்லாவற்றையும்.

## 61. Nouns ending in டு, று

61. [வேற்றுமைப்படும் பொழுது] நெடிற்றொடர், உயிர்த்தொடர்க் குற்றுகரங்களிலே, உகரம் ஏறிநின்ற டகர, றகர மெய்கள் பெரும்பாலும் இரட்டும்.

(உ-ம்.) ஆடு : ஆட்டை; ஆட்டுக்கால்.
சோறு : சோற்றை; சோற்றுச்சுவை.
உதடு : உதட்டை; உதட்டுநோய்.
கயிறு : கயிற்றை; கயிற்றுப்பின்னல்.

சிறுபான்மை ககர, தகர மெய்களும் இரட்டும்.

(உ-ம்.) வெருகு : வெருக்குக்கண்.
எருது : எருத்துத்தோல்.

## 62. Plural terminations of nouns of the rational class.

62. உயர்திணைப் பன்மைப்பாலின் விகுதிகள் அர், ஆர், கள், மார் என்பவையாம்.

(உ-ம்.) குழையர், குழையார், மனுக்கள், குருமார்.
[வேற்றுமை உருபேற்கும்பொழுது]
குழையரை, குழையாரால், மனுக்களுக்கு, குருமாருக்கு.

## 63. Paradigm

63. மேற்சொல்லிய வேற்றுமைகளைக் காட்டிய அட்டவணை வருமாறு:

---

* அற்றுச் சாரியையுடன் 'இன்' சாரியை பெறுதலும் உண்டு.

(உ-ம்.) எல்லாவற்றினையும்.

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| i | தந்தை | தந்தைகள் |
| ii | தந்தையை | தந்தைகளை |
| iii | தந்தையால் - யான் - யோடு - யுடன் | தந்தைகளால் |
| iv | தந்தைக்கு | தந்தைகளுக்கு |
| v | தந்தையில்-யின்-யிலிருந்து -யினின்று | தந்தைகளில் |
| vi | தந்தையினது- யினுடைய | தந்தைகளினது |
| vii | தந்தையினிடத்தில் - யின்கண் | தந்தைகளிடத்தில் |
| viii | தந்தையே | தந்தைகளே |

## 64. Declension of அது, இது, எது, யாது.

*64.* அது, இது, எது, யாது என்னும் அஃறிணையொருமைச் சுட்டுப் பெயர்கள், [வேற்றுமை உருபுகளை ஏற்கும்பொழுது] அன் சாரியையும், இன் சாரியையும்[1], அவை, இவை, எவை, யாவை என்னும் பன்மைச் சுட்டுப் பெயர்கள் அற்றுச்சாரியையும்[2] பெறும்.

*(உ-ம்.)*

| ஒருமை | | பன்மை |
|---|---|---|
| | அது | அவை, அவைகள். |
| i | அதனை | அவற்றை, அவைகளை. |
| ii | அதினால்[1] | அவற்றால், அவைகளால் |

*1* அஃறிணையொருமைச் சுட்டுப் பெயர்கள் 'இன்' சாரியை பெறுதல் சிறப்பும் பெருவழக்குமின்று

2. அவை, இவை, எவை, யாவை என்னும் பன்மைச் சுட்டுப் பெயர்கள் வேற்றுமை உருபுகளை ஏற்கும்பொழுது, அற்றுச் சாரியையும், அற்றுச்சாரியையுடன் இன் சாரியையும் பெறும். (எ-கா.) அவற்றினால், இவற்றினால்

## 65. Declension of Ist Personal pronoun

65. இரண்டாவது முதலான வேற்றுமை உருபுகளை ஏற்கும்போது [தன்மையைக் குறிக்கும்] நான், யான் என்பவை என் எனவும், நாம், என்பது நம் எனவும் [யாம் என்பது] எம் எனவும், நாங்கள் என்பது [நங்கள் எனவும் ] [யாங்கள் என்பது] எங்களெனவும் திரியும். *(உ-ம்.)*

| ஒருமை | | பன்மை |
|---|---|---|
| | நான், யான் | நாம், [யாம்], நாங்கள் [யாங்கள்] . |
| I | என்னை | நம்மை, எம்மை, எங்களை . |
| II | என்னால் | நம்மால், எங்களால் . |

## 66. Declension of 2nd personal pronoun

66. இரண்டாவது முதலிய வேற்றுமை உருபுகளை ஏற்கும்போது, [முன்னிலைப் பெயர்களான] நீ என்பது உன் எனவும், நீர் என்பது உம் எனவும், நீங்கள் என்பது உங்கள் எனவும் திரியும். *(உ-ம்.)*

| ஒருமை | | பன்மை |
|---|---|---|
| நீ | | நீர், நீங்கள் |
| I | உன்னை | உம்மை, உங்களை |
| II | உன்னால் | உம்மால், உங்களால் |

## 67. Declension of the reflective pronoun

67. இரண்டாவது முதலிய வேற்றுமை உருபுகளை ஏற்கும்போது, [மூவிடப் பொதுப்பெயர்களான] தான் என்பது தன் எனவும்தாம் என்பது தம் எனவும், தாங்கள் என்பது தங்கள் எனவும் திரியும். *(உ-ம்.)*

| ஒருமை | | பன்மை |
|---|---|---|
| தான் | | தாம், தாங்கள் |
| I | தன்னை | தம்மை, தங்களை |
| II | தன்னால் | தம்மால், தங்களால் |

## 2. வினையியல்
## II. Verbs

### 68. Analysis of verbs

*68.* வினைச்சொல்லில் பகுதி, விகுதி, மூவிடம், ஐம்பால், காலம், ஏவல், வியங்கோள், ஈரெச்சம், எதிர்மறை, தொழிற்பெயர் இப்பத்தினையும் அறியவேண்டும்.

### 69. Root

*69.* வினைச்சொல்லில் முதனிலையாய் நிற்கும் பகாப்பதங்களே பகுதிகளாம்.

(உ-ம்.) நடந்தான், படித்தான் - இவைகளில் நட, படி என்பவை பகுதியாம்.

### 70. Terminations

*70.* திணையையும், பாலையும், இடத்தையும் காண்பித்து, வினைச்சொல்லின் ஈற்றில் நிற்பதே விகுதி என்பதாம்.

### Terminations of verbs tabulated.

| (உ-ம்) | | | விகுதி | பகுதியும் விகுதியும் |
|---|---|---|---|---|
| உயர்திணை | ஒருமை | தன்மை<br>முன்னிலை | ஏன்<br>ஆய் | வந்தேன்<br>வந்தாய் |
| | பன்மை | தன்மை<br>முன்னிலை | ஓம்<br>ஈர், ஈர்கள் | வந்தோம்<br>வந்தீர்,வந்தீர்கள் |
| | ஆண்பால் | படர்க்கை | ஆன், அன் | வந்தான்,<br>வந்தனன் |
| | பெண்பால் | படர்க்கை | ஆள், அள் | வந்தாள்<br>வந்தனள் |
| | பலர்பால் | படர்க்கை | ஆர், அர் | வந்தார்<br>வந்தனர் |
| அஃறிணை | ஒன்றன் பால் | படர்க்கை | து | வந்தது |
| | பலவின் பால் | படர்க்கை | அ | வந்த, வந்தன. |

இவ் விகுதிகளோடு வழங்குகிற வினைச்சொல் வினைமுற்று எனப்படும்.

## 71. Tense

*71. காலம் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூவகையாம். இவை பகுதி, விகுதி இரண்டிற்கும் நடுவே வரும் இடைநிலைகளால் பெரும்பாலும் குறிக்கப்படும்.*

## 72. Signs of the Past Tense

*72. த், ட், ற் இம்மூன்று மெய்யெழுத்துகளும், இன் என்பதும், இறந்தகாலத்தைக் குறிக்கும் இடைநிலைகளாம். (உ-ம்.)*

| பகுதி | இடைநிலை | விகுதி | வினைமுற்று |
|---|---|---|---|
| படி | த் | ஏன் | படித்தேன் |
| காண் | ட் | ஏன் | கண்டேன் |
| செல் | ற் | ஏன் | சென்றேன் |
| அனுப்பு | இன் | ஏன் | அனுப்பினேன் |

## 73. Signs of the Present Tense

*73. கிறு, கின்று, ஆநின்று இம்மூன்றும் நிகழ் காலத்தைக் குறிக்கும் இடைநிலைகளாம்.*

(உ–ம்.)

| பகுதி | இடைநிலை | விகுதி | வினைமுற்று |
|---|---|---|---|
| படி | கிறு | ஏன் | படிக்கிறேன் |
| போ | கின்று | ஆன் | போகின்றான் |
| நட | ஆநின்று | ஓம் | நடவாநின்றோம் |

## 74. Signs of the Future Tense

*74. ப்,வ் இவ்விரண்டு ஒற்றும் எதிர்காலத்தைக் குறிக்கும் இடைநிலைகளாம்.*

(உ-ம்.)

| பகுதி | இடைநிலை | விகுதி | வினைமுற்று |
|---|---|---|---|
| படி | ப் | ஏன் | படிப்பேன் |
| செய் | வ் | ஏன் | செய்வேன் |

## 75. Paradigm of Verbs

*75.* இம்மூன்று கால இடைநிலைகளும் விகுதிகளோடே வழங்குகிற அட்டவணை.

| | | நிகழ்காலம் | இறந்தகாலம் | எதிர்காலம் |
|---|---|---|---|---|
| | நான் | படிக்கிறேன் | படித்தேன் | படிப்பேன் |
| ஒ | நீ | படிக்கிறாய் | படித்தாய் | படிப்பாய் |
| ரு | அவன் | படிக்கிறான் | படித்தான் | படிப்பான் |
| மை | அவள் | படிக்கிறாள் | படித்தாள் | படிப்பாள் |
| | அது | படிக்கிறது | படித்தது | படிப்பது |
| | நாம் | படிக்கிறோம் | படித்தோம் | படிப்போம் |
| ப | நீர் | படிக்கிறீர் | படித்தீர் | படிப்பீர் |
| ன் | நீங்கள் | படிக்கிறீர்கள் | படித்தீர்கள் | படிப்பீர்கள் |
| மை | அவர் | படிக்கிறார் | படித்தார் | படிப்பார் |
| | அவர்கள் | படிக்கிறார்கள் | படித்தார்கள் | படிப்பார்கள் |
| | அவை | படிக்கின்றன | படித்தன | படிப்பன |

¤ உம் விகுதியைப் பெற்றுவரும் செய்யும் என்னும் முற்று, எதிர்காலத்தைக் காட்டிக்கொண்டு, அஃறிணை ஒருமை பன்மைகளில் பெரும்பாலும் வரும்.

(உ-ம்.) அது படிக்கும், அவை படிக்கும்.

## 76. Imperative

*76.* ஏவலாவது, கட்டளைப் பொருளுள்ள முற்றுச்சொல்லேயாம்; அது முன்னிலையிடத்தை மாத்திரம் பெறும்; வினைச்சொல்லின் பகுதியே ஒருமை ஏவலாம்; அதனோடு உம் விகுதியாவது, உம்மோடே கள் விகுதியாவது புணர்ந்தால், பன்மை ஏவலாம்.

(உ-ம்.) படி, படியும், படியுங்கள்.

## 77. The Optative

*77.* வியங்கோளாவது இருதிணை, ஐம்பால், மூவிடங்களுக்கும்

உரித்தாய் மரியாதையாய் ஏவும் ஏவல் வினைமுற்றுச் சொல்லேயாம்[1] (உ-ம்.)

| | | | | |
|---|---|---|---|---|
| ஒருமை | நான் | வாழ்க | வாழ்வேனாக | செய்யக் கடவேன் |
| | நீ | வாழ்க | வாழ்வாயாக | செய்யக் கடவாய் |
| | அவன் | வாழ்க | வாழ்வானாக | செய்யக் கடவன் |
| | அவள் | வாழ்க | வாழ்வாளாக | செய்யக் கடவள் |
| | அது | வாழ்க | வாழ்வதாக | செய்யக் கடவது |
| பன்மை | நாம் | வாழ்க | வாழ்வோமாக | செய்யக் கடவோம் |
| | நீர் | வாழ்க | வாழ்வீராக | செய்யக் கடவீர் |
| | நீங்கள் | வாழ்க | வாழ்வீர்களாக | செய்யக்கடவீர்கள் |
| | அவர்கள் | வாழ்க | வாழ்வார்களாக | செய்யக்கடவர்கள் |
| | அவை | வாழ்க | வாழ்வனவாக | செய்யக் கடவன |

## 78. Participles

*78. எச்சம் என்பது குறைவு; அது வினையெச்சமெனவும் பெயரெச்சமெனவும் இரு வகையாம்.*

## 79. Dependent Verbal forms, or Adverbial Participles

*79. முக்காலத்து வினைமுற்றுகளைக்கொண்டு முடிவன வினையெச்சமாம்;[2] வினையெச்சங்கள் மூன்றாம்.[3]*

---

1. மரியாதையாய் ஏவும் ஏவல் வினைமுற்றுச் சொல் என்பதினும், உரைப்போனின் விருப்பத்தை வெளிப்படுத்தி (மரியாதையாய்க் கட்டளையிடவும் வாழ்த்த, வேண்ட, சபிக்கவும் பயன்பட்டு) ஏவல்போல் வரும் சொல் எனலே சிறப்பு.

2. *முக்காலத்து வினைமுற்றுகளைக் கொண்டு முடிகின்ற எச்ச (வினை)ச் சொற்கள் வினையெச்சமாம்.*

3. *தெரிநிலை வினையெச்சம், கால அடிப்படையில் இறந்தகால வினையெச்சம், எதிர்கால வினையெச்சம், நிகழ்கால வினையெச்சம் என மூவகைப்படுத்தப்படுவதையே இங்கு இது குறிக்கிறது.*

(உ-ம்.) (க) படித்து, வந்து, சொல்லி, விட்டு என்பவை இறந்த கால வினையெச்சமாம்.[1]

['படித்து வென்றான்','வந்து சென்றான்' என அமையும்]

(உ) படித்தால், வந்தால், சொன்னால், விட்டால், படிக்கின், வரின், சொல்லின், விடின் என்பவை எதிர்கால வினையெச்சமாம்.[2]

('வந்தால் கொடுப்பேன்', 'சொன்னால் தருவேன்' என அமையும்]

(ங) படிக்க, வர, சொல்ல, விட என்பவை முக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சமாம்.[3]

['படிக்க வந்தேன்', 'படிக்க வருகிறேன்', 'படிக்க வருவேன்' என அமையும்]

**80. Relative verbal forms, or adjective participles.**

*80. பெயர்ச்சொல்லைக் கொண்டு முடியும் எச்சம் பெயரெச்சமாம்; பெயரெச்சம் மூவகையாம்.*

(உ-ம்.) படித்த என்றாற்போல்வன இறந்தகாலப் பெயரெச்சமாம்.
படிக்கிற என்றாற்போல்வன நிகழ்காலப் பெயரெச்சமாம்.
படிக்கும் என்றாற்போல்வன எதிர்காலப் பெயரெச்சமாம்.

---

*1. இவற்றைச் 'செய்து' என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம் என மரபிலக்கண நூல்கள் கூறும்.*

*2. இவற்றைச் 'செயின்' என்னும் வாய்பாட்டு எதிர்கால வினையெச்சம் என மரபிலக்கண நூல்கள் கூறும்.*

*3. இவற்றைச் 'செய' என்னும் வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சம் என மரபிலக்கண நூல்கள் கூறும். நிகழ்கால வினையெச்சம் ஏனைக் காலத்திற்கும் பொதுவாக அமைவது கொண்டு இங்கு இவை நிகழ்கால வினையெச்சம் எனக் குறிக்கப்பெறாமல் 'முக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சம்' எனக் குறிக்கப்பெற்றுள்ளன.*

## 81. Negative Verbs

*81. தொழிலை மறுக்கிற வினைச்சொல்லே எதிர்மறை என்னப்படும்.*

### Finite Negative Verbs

இடைநிலையின்றிப் பகுதியும் விகுதியும் புணர்ந்துவருவது முக்காலத்துக்கும் பொதுவான எதிர்மறை வினைமுற்றாம்.

| ஒருமை | | பன்மை | |
|---|---|---|---|
| நான் | படியேன் | நாம் | படியோம் |
| நீ | படியாய் | நீர்<br>நீங்கள் | படியீர்<br>படியீர்கள் |
| அவன் | படியான் | அவர் | படியார் |
| அவள் | படியாள் | அவர்கள் | படியார்கள் |
| அது | படியாது | அவை | படியா |

### Negative Dependent Verbal Forms

*எதிர்மறை வினையெச்சமாவன:*

*படியாமல் [அழிந்தான்] ,படியாது [திரிந்தது] என வருவனவாம்.*

### Negative Relative Verbal Forms

*எதிர்மறைப் பெயரெச்சமாவன:*

*படியாத [பெண்], செய்யாத [சிலை] என வருவனவாம்.*

### Negative Imperative

*எதிர்மறை ஏவலாவது :*

*ஒருமையில் படியேல் எனவும், பன்மையில் படியன்மின் எனவும் வருவனவாம்.*

## 82. Verbal Nouns

*82. தல், அல், கை என்பவை வினைப்பகுதியோடே புணரவரும் சொற்கள் தொழிற்பெயராம்.*

(உ-ம்.) செய்தல், செயல், செய்கை, படித்தல், ஈகை.

*மை என்பது [வினைப்பகுதியோடு கூடிய] இறந்தகால நிகழ்கால இடைநிலையோடே புணரவரும் சொற்களும் தொழிற்பெயராம்.*

(உ-ம்.) படிக்கின்றமை, படித்தமை, சொல்லுகின்றமை, சொன்னமை.

ஆமை* என்பது வினைப்பகுதியோடே புணர வரும் சொற்கள் எதிர்மறைத் தொழிற்பெயராம்.

(உ-ம்.) படியாமை, கொடாமை.

## 83. Participial Nouns

83. முன்பு ஒரு பொருளின் தொழிலை உணர்த்தி, முற்றுவினைச் சொல்லாயிருந்து, பின் அப்பொருளுக்குப் பெயராய் வருவது வினையாலணையும் பெயராம். அது ஈறு திரிந்தும் திரியாதும் வரும்.

| (உ-ம்) | நிகழ்காலம் | இறந்தகாலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| ஆண்பால் | படிக்கிறவன் | படித்தவன் | படிப்பவன் |
| பெண்பால் | படிக்கிறவள் | படித்தவள் | படிப்பவள் |
| பலர்பால் | படிக்கிறவர்கள் | படித்தவர்கள் | படிப்பவர்கள் |
| ஒன்றன்பால் | படிக்கிறது | படித்தது | படிப்பது |
| பலவின்பால் | படிக்கிறவை | படித்தவை | படிப்பவை |



* "ஆ எனும் எதிர்மறை இடைநிலையும், மை எனும் தொழிற்பெயர் விகுதியும்" எனக் கொள்க.

# 3. இடைச்சொல்லியல்
# III. Particles

## 84. Classes of Particles

*84.* வேற்றுமை உருபுகளும், வினை உருபுகளும், சாரியைகளும், உவமைச் சொற்களும், தத்தம் பொருளைக் காட்டிய சொற்களும், இசை நிறைக்கிற சொற்களும், அசை நிறைக்கிற சொற்களும், குறிப்பின் வருகிற சொற்களும் என இடைச்சொற்கள் எட்டுவகையாம்.

## 85. Increments

*85.* அன், ஆன், இன், அல், அற்று, இற்று, அத்து, அம், தம், நம், நும், ஏ, அ, உ, ஐ, கு, ன் இப்பதினேழும் சாரியைகளாம்.

(உ-ம்.) மூன்று+கால் = மூன்றே கால் : என்பதில்
ஏ சாரியை வந்தது.

மனிதன்+கு = மனிதனுக்கு : என்பதில்
உ சாரியை வந்தது.

## 86. Words of Comparison

*86.* போல, ஒப்ப, நேர, நிகர, படி முதலியவை உவமைச் சொற்களாம்[1].

(உ-ம்.) இதைப் போல, அதற்கொப்ப.

[2]

## 87. Particles of Various Meanings

*87.* ஏ, ஓ, உம், என, என்று, என்பவன், ஆனவன், என்பது, ஆனது, ஆவது, ஆ, முன், பின், கீழ், மேல், என்றா, எனா, அந்தோ முதலியவை தத்தம் பொருளைக்காட்டிய இடைசொற்களாம்.

---

1. உவம உருபுகளாம்.

2. எடுத்துக்காட்டுகள் :

புலிபோலப் பாய்ந்தான், வானொப்பப் பரந்த உள்ளம், பொன்நேர் புதுமலர், மலைநிகர் தோள், (சொன்னபடி செய்தான்).

**88. Uses of ஏ**

88. ஏ ஆறுவகைப் பொருளைத் தரும்; அவையாவன :

| | | |
|---|---|---|
| (i) தேற்றம் | (உ-ம்.) | சன்மார்க்கருக்கே புகழ் |
| (ii) எண் | (உ-ம்.) | நிலமே, சலமே, தீயே, வளியே. |
| (iii) வினா | (உ-ம்.) | நீயே தந்தாய்? |
| (iv) பிரித்தல் | (உ-ம்.) | அவனே தந்தான் |
| (v) ஈற்றசை | (உ-ம்.) | பகர்ந்தனனே |
| (vi) இசைநிறை | (உ-ம்.) | ஏயே யிவளொருத்தி* |

**89. Uses of ஓ**

89. ஓகாரம் எட்டுப்பொருளைக் காட்டும்; அவையாவன:

| | | |
|---|---|---|
| (i) பிரித்தல் | (உ-ம்.) | அவனோ செய்தான் |
| (ii) ஒழியிசை | (உ-ம்). | வேலைசெய்யவோ போகிறாய் |
| (iii) எதிர்மறை | (உ-ம்.) | நானோ சொன்னேன் |
| (iv) வினா | (உ-ம்.) | அவனோ பேசினான்? |
| (v) தெரிநிலை | (உ-ம்.) | நன்றோ வன்று, தீதோ வன்று |
| (vi) கழிதல் | (உ-ம்.) | நைதலின்றி நல்லறஞ் செய்தாலோ உயிருய்யும் |
| (vii) சிறப்பு | (உ-ம்.) | ஓஓ பெரியன் |
| (viii) அசைநிலை | (உ-ம்.) | ஓஓ உவமன் |

**90. Uses of உம்.**

90. உம் என்பது எட்டுப் பொருளைக் காட்டும்; அவையாவன:

| | | |
|---|---|---|
| (i) எதிர்மறை | (உ-ம்.) | வருதலும் தீது. |
| (ii) எச்சம் | (உ-ம்.) | சாத்தனும் வந்தான் |
| (iii) முற்று | (உ-ம்.) | தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்கள். |
| (iv) எண் | (உ-ம்.) | பொன்னும், வெள்ளியும், ஈயமும். |
| (v) சிறப்பு | (உ-ம்.) | குறவரும், மருளுங் குன்றம் |
| (vi) ஐயம் | (உ-ம்.) | பத்தானாலும் எட்டானாலும் |
| (vii) ஆக்கம் | (உ-ம்.) | பாலுமாயிற்று |
| (viii) தெரிநிலை | (உ-ம்.) | ஆணுமன்று, பெண்ணுமன்று |

* 'ஏஏ யிவளொருத்தி' எனக் குறித்தல் நன்று.

## 91. Uses of என, என்று.

*91. என, என்று இரண்டும் ஏழு பொருளைத் தரும்; அவையாவன :*

| | | |
|---|---|---|
| (i) உவமை | *(உ-ம்.)* | கொடும்புலி பாய்ந்தெனப் பாய்ந்தான் |
| (ii) எண் | *(உ-ம்.)* | ஒன்றென, இரண்டென; அன்றியும் என்றா, எனா இவ்விரண்டும் இவ்வாறு வழங்கும். |
| (iii) குணம் | *(உ-ம்)* | வெள்ளென விளங்கிற்று. |
| (iv) வினை | *(உ-ம்.)* | கொள்ளெனக் கொண்டான். |
| (v) பெயர் | *(உ-ம்.)* | உறையூரென்று சொல்லப்படுவது. |
| (vi) இசை | *(உ-ம்.)* | ஒல்லென ஒலித்தது. |
| (vii) குறிப்பு | *(உ-ம்.)* | பொள்ளென வந்தான். |

## 92. Uses of என்பவன், ஆனவன்

*92. என்பவன், ஆனவன், இரண்டும்[1] உயர்திணைப் பெயரோடும், என்பது, ஆவது, ஆனது மூன்றும் அஃறிணைப் பெயரோடும், இடைச்சொல்லாய்ப் பொருளின்றி[2] அடுத்து நிற்கும்.*

(உ-ம்.) சாத்தனென்பவன், சாத்தனானவன்,[3]
தோட்டமென்பது, தோட்டமானது, தோட்டமாவது.

---

1. 'என்பவள், ஆனவள்' என்பவற்றையும் இணைத்துக் கொள்க.
2. நுட்பமான பொருளுண்டு. 'சாத்தன் வந்தான்' எனும்போது முன்அறிமுகம் உள்ளமையையும் 'சாத்தன் என்பவன் வந்தான்' எனும்போது முன்அறிமுகம் இன்மையையும் உணர்த்தும்.
3. 'சாத்தியென்பவள், சாத்தியானவள்' என்பவற்றையும் இணைத்துக் கொள்க.

## 4. உரிச்சொல்லியல்

# IV. Qualifying Words-Adjectives and Adverbs

### 93. Kinds of Qualifying Words

*93. உரிச்சொல் பெயருரிச்சொல்லென்றும், வினையுரிச்சொல்லென்றும் இருவகையாம்.*

### 94. Adjectives

*94. (க) சிலவிடத்துப் பெயரானது உரிச்சொல்லாக வரும்.*

(உ-ம்.) நற்சிலை. - இதில் நன்மையெனும் பெயர்ச்சொல் குணத்தைக் காட்டிய உரிச்சொல்லாக வந்தது.

(உ) பெயர்ச்சொற்கள் சிலவிடத்து உள்ள, ஆன என்னும் பண்பை விளக்குமொழிகளோடு இணைந்து, உரிச்சொல்லாக நிற்கும்.

(உ-ம்.) அறிவுள்ள மனிதன், செம்மையான பாதை.

---

* *இப்பகுதியில் உள்ளவற்றை உரிச்சொல் குறித்த விளக்கங்கள் என்பதைவிடப் பெயரடை, வினையடை குறித்த விளக்கங்கள் என்றே கருத வேண்டியுள்ளது.*

*உரிச்சொற்களும் பெயரடை, வினையடையாக வரும் எனும் ஒரு கூறே இங்கு நினைவுகொள்ளத்தக்கதாகும்.*

*உரிச்சொல் என இப்பகுதியில் எடுத்துக்காட்டப் பெற்ற நற்சிலை, வட்டக்கல் ஆகியவை மரபிலக்கணப்படி ஒரு சொல் நீர்மையுற்ற பண்புத்தொகைச் சொற்களேயாகும். 'சிறிய வீடு' என்பதிலுள்ள 'சிறிய' என்பது மரபிலக்கணப்படி பெயரெச்சமேயன்றி உரிச்சொல் ஆகாது. 'அறிவுள்ள மனிதன்', 'செம்மையான பாதை' என்பவற்றில் உரிச்சொற்கள் உள்ளனவாகக் கூறும் மரபோ அவற்றை உரிச்சொற்றொடர் என அழைக்கும் மரபோ தமிழில் இல்லை.*

(ங) சில பெயர்கள் ஈறுகெட்டும் திரிந்தும் உரிச்சொல்லாகும்.

(உ-ம்.) வட்டம், வட்டக்கல்
சிறுமை, சிறிய வீடு.

(ச) சில இயல்பாய் உரிச்சொற்களுமுண்டு.

(உ-.ம்.) நனி, கடி.

## 95. Adverbs

*95. (க) சில வினையெச்சங்கள் வினையுரிச் சொற்களாக வழங்கும்.*

(உ-ம்.) சாலப் பேசினான்.

(உ) சில பெயர்ச்சொல்லோடே ஆய் என்னும் வினையெச்சம் புணர்ந்து வினையுரிச் சொல்லாகும்.

(உ-.ம்.) சந்தோஷமாய்ப் பேசினான்.

(ங) சில வினைப்பகுதிகளே சில இடத்து வினையுரிச் சொல்லாக வழங்கும்.

(உ-.ம்.) மிகு, மிகுபொருள்,
உறு, உறுசெயல்.

---

உரிச்சொல் பெயரடையாகவும் வினையடையாகவும் வரும். ஆனால், பெயரடையாகவும் வினையடையாகவும் வரும் அனைத்தும் உரிச்சொற்கள் எனக் கூறுதல் பொருந்தாது.

உரிச்சொல் - மரபிலக்கணப்படி வரையறை.

செய்யுட்குரியனவாய், பொதுவாகப் பண்புப்பொருள் குறிப்பனவாய், பெயருக்கும் வினைக்கும் அடைபோன்று உரிமைபூண்டு நிற்பனவாய் அமைவன உரிச்சொற்களாம். இவை 'ஒருபொருள் குறித்த பலசொல்' எனவும் 'பலபொருள் குறித்த ஒருசொல்' எனவும் இருவகைப்படும்.

(எ-டு.) நனி, கடி, முதலியன.

இவற்றில் 'நனி' எனும் சொல் மிகுதிப் பொருளைக் குறிக்கும் ஆறு சொல்லில், அதாவது 'ஒருபொருள் குறித்த பலசொல்'லில் ஒன்றாகும். 'கடி' எனும் சொல், பதின்மூன்று பொருளைக் குறிக்கும் 'பலபொருள் குறித்த ஒருசொல்'லாகும்.

மூன்றாவது

# சொற்றொடர் அதிகாரம்

# III SYNTAX

## 96. Syntax

*96.* பெயர் முதலான சொற்கள் அர்த்தத்தைத்* தந்து, ஒன்றோடொன்று ஒழுங்குபடத் தொடர்ந்து நிற்றல் சொற்றொடராம்.

## 97. A Sentence

*97.* எழுவாயும் பயனிலையும் கூடியது வாக்கியமாம்.

[ எ-டு. : வீடு இடிந்தது.]

## 98. Subject

*98.* ஒரு வாக்கியத்தின் முதற்பொருள் எழுவாயாம்.

(உ-ம்.) வீடு இடிந்தது : இதில் வீடு என்பது வாக்கியத்தின் முதற்பொருளாகிய எழுவாயாம்.

## 99. Finite Verb or its substitute.

*99.* வாக்கியத்தின் முதற்பொருளின் செயலைக் காண்பிப்பது பயனிலையாம்.

[(உ-ம்.) வீடு இடிந்தது : இதில் இடிந்தது என்பது வாக்கியத்தின் முதற்பொருளின் செயலைக் காண்பிக்கும் பயனிலையாம்.]

---

* 'ரகார ழகாரங் குற்றொற்றாகா' என்பதனை உணர்ந்து முன்னர் 'அருத்தம்' என்று ஆண்ட (வ.எ. 46) நூலாசிரியர் இங்கு 'அர்த்தம்' என்று வடமொழி வடிவிலேயே ஆண்டுள்ளமை நோக்கத்தக்கது.

### 100. Dependent Words

*100. எழுவாய்க்கும் பயனிலைக்கும் ஊடே பலமொழிகள் வரும்.*

(உ-ம்.) நல்ல மனிதன் தாழ்மையாய் இருப்பான்.
இதில், மனிதனென்பது எழுவாய்.
இருப்பானென்பது பயனிலை.
நல்ல, தாழ்மையாய் என்பவை
அடைமொழிகள்*

### 101. Compound Sentences

*101. ஒரெழுவாயும் பல எழுவாயும் ஒரே பயனிலையும் கொள்ளும், பல பயனிலையும் கொள்ளும்; பயனிலைகளாகிய வினைகளிற் கடைசி வினைமாத்திரம் முற்று வினையாயிருக்கும்.*

(உ-ம்.) தாயும் தந்தையும் தோட்டத்தில்
இருந்தார்கள் : இதில் இரண்டு
எழுவாய்கள் ஒரே பயனிலை கொண்டன.

தந்தை பாவஞ்செய்து, நிர்ப்பாக்கியனாகி
மரணம் அடைந்தான்: இதில் ஒரே
எழுவாய் மூன்று பயனிலையும் கொண்டது.

### 102. Concord.

*102. பயனிலையாகிய வினைச்சொல் எழுவாயோடே திணை, பால், இடமாகிய இவைகளில் வேறுபடாமல் இசைந்து இருக்கவேண்டும்.*

(உ-ம்.) நான் வருவேன்.
குதிரை வந்தது.
மனிதர் வந்தார்கள்.

### 103. More Subjects than one

*103. உயர்திணையாகிய பல சொற்கள் எழுவாயாக அடுக்கிவரின், பயனிலை வினை பலர்பாலாக நிற்கும்.*

*அஃறிணையாகிய பல எழுவாய் வரின் பயனிலை பலவின் பாலாக நிற்கும்.*

---

* *'நல்ல' என்பது பெயரடைமொழி.*
*'தாழ்மையாய்' என்பது வினையடைமொழி .*

(உ-ம்.) மனிதனும் ஸ்திரீயும் வந்தார்கள்.
மரமும் கனியும் கெட்டன.

## 104. Subjects of different persons

*104.* தன்மையிடத்து எழுவாயோடே முன்னிலை, படர்க்கையிடத்து எழுவாய் அடுக்கிவரின், முற்றுவினை தன்மையிடத்ததாய் வரும்.

முன்னிலையிடத்து எழுவாயோடே படர்க்கையிடத்து எழுவாய் அடுக்கிவரின், முற்றுவினை முன்னிலையிடத்ததாய் வரும்.

(உ-ம்.) நானும் நீயும் அவனும் போனோம்.
நீயும் அவனும் போனீர்கள்.

## 105. Particles of doubt in composition

*105. (க)* சந்தேக வாக்கியத்தில் "அவனோ, இவனோ எவன் வந்தான்" என எழுவாயோடே ஒகாரத்தைப் புணர்த்திப் பின்பு வினாச்சொற் கூற வேண்டும்.

*(உ)* "அவனாவது, இவனாவது, வருவான்"; "அகந்தையானாலும் கோபமானாலும் மனிதர்களுக்குத் தகாது";[1] "வீட்டையாயினும், நிலத்தையாயினும் கொடுப்பான்" என ஆவது, ஆனாலும், ஆயினும் என்னும் சொற்களைப் புணர்த்தி அடுக்கிச் சொல்லவேண்டும்.

## 106. Use of the second verbal participle or subjunctive mood

*106.* இரண்டாம் வினையெச்சம்[2] சந்தேகப் பொருளில் எதிர்கால வினைமுற்றைக் கொள்ளும்.

(உ-ம்.) அவன் வந்தாற் காரியம் நடக்கும்.
இப்படிச் செய்தால் நன்மை உண்டாகும்.

---

*1.* இவ்வாக்கியம் சந்தேகப் பொருளைத் தராது. இவ்வெடுத்துக் காட்டு சரியானதன்று.

*2.* "இரண்டாம் வினையெச்சம்" என இங்குக் குறிப்பிடப்படுவது எதிர்கால வினையெச்சத்தையேயாகும். காண்க. வரிசை எண் : *79*

## 107. Use of the third verbal participle, or infinitive mood.

*107. (க) மூன்றாம் வினையெச்சம்[1] பொருட்டுப் பொருளைத் தரும்.*

(உ-ம்.) அவன் சொல்லப் போனான்.

இதிற் சொல்ல என்பது சொல்லும் பொருட்டு எனப் பொரு ட்டுப் பொருளைத் தந்தது.

*(உ) முக்காலப் பொருளையும் தரும்.*

(உ-ம்.) அவர் சொல்ல ஆகும்.
ஒளி வர இருள் போயிற்று.
அப்படி இருக்க நாம் போக வேண்டும்.

*(ங) வியங்கோட் பொருளைத் தரும்.*

(உ-ம்.) ஐயா வர: இதில் வர என்பது வருக என்னும் பொருளைத் தந்தது.

*(ச) காரணப் பொருளைத் தரும்.*

(உ-ம்.) அவன் கேட்க நான் கொடுத்தேன்.

## 108. Use of ஆக following the fourth case

*108. ஆக என்பது பொருட்டுப் பொருளைக் காண்பிக்கிற பொழுது, நான்காம் வேற்றுமையோடு புணரும்.*

(உ-ம்.) அதற்காக வந்தான்.

## 109. Uses of உம் following the first verbal participle

*109. முதலாம் வினையெச்சம்[2] உம்மை பெற்றால் உண்மையோடே நிச்சயப் பொருளையும் எண்பொருளையும் தரும்.*

---

*1* 'மூன்றாம் வினையெச்சம்' என இங்குக் குறிப்பிடப்படுவது *(மரபிலக்கண நூல்கள் நிகழ்கால வினையெச்சம் எனக் குறிப்பிடும்)* முக்காலத்துக்கும் பொதுவான வினை யெச்சத்தை யேயாகும். *காண்க. வ.எ. 79.*

*2* 'முதலாம் வினையெச்சம்' என இங்குக் குறிப்பிடப்படுவது 'இறந்தகால வினையெச்சத்தை'யேயாகும். *காண்க. வ.எ. 79.*

(உ-ம்.) நான் சொல்லியிருந்தும் அவன் செய்யவில்லை.

இதில் நிச்சயப்பொருளைத் தந்தது.

அவர்கள் கூக்குரலிட்டும் அடித்தும் குத்தியும் வந்தார்கள்.

இதில் எண்பொருளைத் தந்தது.

## 110. Uses of உம் following the second verbal participle

*110.* இரண்டாம் வினையெச்சம் உம்மை பெற்றால் இன்மையோடே நிச்சயப்பொருளாய் எதிர்கால முற்றுவினையைக் கொள்ளும்.

(உ-ம்.) நான் சொன்னாலும் அவன் போகமாட்டான்.

## 111. The relative verbal mood.

*111.* (க) பெயரெச்சமானது தன்னை முடிக்கும் பெயருக்கு அடைசொல்லாக[1] வரும்.

(உ-ம்.) படித்த பையன்.
சிறந்த மகிமை.

(உ) பெயரெச்சமானது தனித்துவருவதுமல்லாமல் ஒன்றும் பலவுமான அடைமொழி[2] களோடேயும் வரும்.

(உ-ம்.) வாக்கியத்தில் அடங்கியிருக்கிற பொருள் அவனுக்குத் தெரியாது.

(ங) அநேகம் பெயரெச்சங்கள் ஒரே பெயரைச் சேர்ந்தால் கடைசி எச்சம் தவிர, முந்தின எச்சங்களெல்லாம் முதல் வினையெச்சமாகத் திரியும்.

அன்றியும் தெளிவின் பொருட்டு முந்தின பெயரெச்சங்கள் வினையாலணையும் பெயராகத் திரிதலுமுண்டு.

---

1. மரபிலக்கண நூல்கள் குறிப்பிடும் 'அடைமொழி' என்னும் இலக்கணக் கலைச்சொல்லையே இந்நூலாசிரியர் இங்குப் பொருள்தெளிவின் பொருட்டு 'அடைசொல்' எனக் குறிப்பிடுகின்றார்.
2. மேலே 'அடைசொல்' என்னும் வடிவத்தை ஆண்ட நூலாசிரியர் இங்கும் முன்போரிடத்திலும் (வ.எ. 100) 'அடைமொழி' என்னும் சொல் வடிவத்தை ஆளுதல் நோக்கத்தக்கது.

(உ-ம்.) அனேக[1] மனிதரைக் காப்பாற்றி, மிகுந்த சத்திரங்களையும் கட்டி, யாவருக்கும் அன்பாய் நடந்துவந்த துரை இறந்து போனார். (அல்லது) அனேக மனிதரைக் காப்பாற்றினவரும், அனேக[2] சத்திரங்களைக் கட்டினவரும், யாவருக்கும் அன்பாய் நடந்தவருமாய் இருந்த துரை இறந்து போனார்.

## 112. Dependent Sentences

*112. இடைப்பிறவரலாயும் வாக்கியங்கள் வரும்; ஒரு வாக்கியத்தில் எழுவாயும் பயனிலையும் பல அடைமொழிகளுமுள்ள வேறொரு வாக்கியம் வந்தால், அது என்று என்பதினால் பிரிக்கப்பட்டு, முதல் எழுவாயையும் பயனிலையையும் தழுவி, இடைப்பிறவரலாய் வந்த வாக்கியம் என்னப்படும்.*

(உ-ம்.) "சேவகன் வந்து கள்ளர் சில பொருள்களைக் கொண்டு போனார்களென்றும், அடுத்த ஊரிலே ஒளித்துக் கொண்டிருக் கிறார்களென்றும் அறிவித்தான்" என்பதில் "கள்ளர் சில பொருள்களைக் கொண்டுபோனார்கள்" என்ற வாக்கியமும், "அடுத்த ஊரிலே ஒளித்துக் கொண்டிருக்கிறார்கள்", என்ற வாக்கியமும் இடைப்பிறவரலாய் வந்த வாக்கியங்களாம்.

## 113. Verbal Nouns

*113. தொழிற்பெயரானது பெயர்ச்சொல் வினைச்சொல் இரண் டினது தன்மையையும் பெற்றுவரும்.*

(உ-ம்.) தீயோரைக் காண்பதும் தீதே.
சொல்லுதல் யார்க்கும் எளிதாம்.
சொல்லிய வண்ணம் செய்தல் அரிதாம்.

## 114. Present tense used Indefinitely.

*114. முக்காலத்தும் நிகழும் வினையை நிகழ்காலத்திற் கூற வேண்டும்.*

(உ-ம்.) கடவுள் எங்கும் இருக்கிறார்.

---

*1. அநேகம், அனேகம் ஆகிய இரு வடிவங்களும் இங்குக் காணப்படுகின்றன.*

*2. 'மிகுந்த' என்றிருத்தல் பொருத்தம்.*

## 115. Present and Past for future

*115. விரைவினாலே நிகழ்கால வினையும் இறந்தகால வினையும் எதிர்காலத்தைக் குறிக்கும்.*

(உ-ம்.) வருகிறேன்.* எ-து. சீக்கிரமாய் வருவேனென்றும் அர்த்தங்கொள்ளும்.
நான் சாப்பிட்டாயிற்று. எ-து. நான் சாப்பிடுகிறது சீக்கிரமாயாகுமென்றும் அர்த்தங்கொள்ளும்.

## 116. Past Tense for future.

*116. நிச்சயப்பொருளில் இறந்தகாலவினை வருங்காலத்தைக் காட்டும்.*

(உ-ம்.) "அப்படிச் செய்தாயேயானாற் செத்தாய்", "எறும்பு முட்டை கொண்டு திட்டையேறின் மழை பெய்தது" என்பவைகளில் நிச்சயமாய்ச் சாவாய் என்றும், நிச்சயமாய்ப் பெய்யும் என்றும் பொருள்.

## 117. Future for present and past

*117. எதிர்காலவினை காரணமில்லாமல் இயல்பாகவே நிகழ்காலத்தையும் இறந்தகாலத்தையும் காட்டும்.*

(உ-ம்.) "அவன் இன்று தருமம் கொடுப்பான்.", "முன்னோர்கள் பல காரியங்களைச் சொல்வார்கள்." இவைகளிலே கொடுப்பான் என்பது கொடுக்கிறான் எனவும், சொல்வார்கள் என்பது சொன்னார்கள் எனவும் பொருள் தருதல் காண்க.

---

(முற்றும்)

---

* 'இதோ வருகிறேன்' என்றிருத்தல் சிறப்பு.

